[25th April 1962

புகார்கள் வந்தபோது ஒரு தடவை கூடியது. அதற்கு தலைவர் வந்திருந்தும் மற்ற அங்கத்தினர்கள் வரவில்லை, அக்கறை காட்டவில்லை.

SRI M. KALYANASUNDARAM : ஆளும் கட்சியினரும் எதிர்க் கட்சியினர்மீது புகார் செய்துள்ளார்கள் என்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். எதிர்க்கட்சியில் கம்யூனிஸ்ட் கட்சி காங்கிரஸ் கட்சியின்மீது புகார் செய்துள்ளது. ஆனால் திராவிட முன்னேற்ற கழகம் புகார் செய்தது என்று சொல்லுகிறதே தவிர கம்யூனிஸ்ட் கட்சியைப்பற்றி சொல்லவில்லை. காரணம் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : என்னிடம் இதைப் பற்றி தகவல் இல்லை.

*Kudaganar Scheme*

* 5 Q.—SRI M. KARUNANITHI : கனம் பொதுப்பணித் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கரூர் தாலுகா, வெள்ளியணைப் பகுதியில் குடகனாறு திட்டத்திற்கான ஆரம்ப வேலைகள் துவக்கப்பட்டுள்ளனவா?

THE HON. SRI V. RAMAIAH : No, Sir. Only the detailed investigation of the scheme has been completed.

SRI M. KARUNANITHI : இந்தத் தொகுதியிலே திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர் வெற்றிபெற்றிருந்ததால் இந்தத் திட்டம் வரவில்லை என்று அமைச்சர்கள் பிரசாரம் செய்தார்கள். இனிமேலாவது இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு வழி வகை செய்வார்களா?

THE HON. SRI V. RAMAIAH : அப்போது அந்த திட்டம் இன்வெஸ்டிகேஷனில் இருந்தது. இப்போது அந்த திட்டத்தைப் பற்றிய இன்வெஸ்டிகேஷன் முடிந்துவிட்டது. மேலும் இந்த விஷயத்தை பரிசீலனை செய்து அதற்கு வேண்டியதை செய்வார்கள்.

SRI V. S. S. MANI : குடகனாறு நதி எங்கிருந்து உற்பத்தியாகிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் தெரிவிப்பார்களா?

THE HON. SRI V. RAMAIAH : இதற்கு தனி கேள்வி போட வேண்டும்.

SRI M. KALYANASUNDARAM : குடகனாறு நதித் திட்டம் திருச்சி ஜில்லாவிற்கு மட்டுமல்லாமல் மதுரை ஜில்லாவிற்கும் பொதுவானது. இந்தத் திட்டம் மதுரை ஜில்லாவிலேயுள்ள திண்டுக்கல் தாலுகாவிலுள்ள ஒரு பகுதிக்கும் பயன்படும் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

THE HON. SRI V. RAMAIAH : இப்போது திண்டுக்கல் தாலுக்காவில் ஒரு அணைக்கட்டு கட்டுவது என்று உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.